ளது. திருமப்பற்று என்று இப்போது வழங்குகின்றது. நமிநந்தியடிகளாருக்குத் தனியாலயம் இருக்கின்றது.

## நமிநந்தியடிகள்

இவர் சிவாகம விதிப்படி சிவதீக்கை பெற்றுச் சைவ சித்தாந்த நெறியில் நிற்கும் அந்தணராகிய மகா சைவர் மரபு என அறிக.

அந்தணரில் பலர் சிவபெருமானிடம் உறுதியும் அன்பும் இன்றி, பல தெய்வங்களை வணங்கி உழலுவர். ததீசி முனிவரும் பிருகு முனிவரும் தந்த சாபத்தால் என்று அறிக.

முத்தி யுலகிற்கு முதற்படி ஏகதேவ வழிபாடேயாகும். எந்த மூர்த்தியையும் தனது வழிபடு மூர்த்தியாகவே எண்ணி வணங்குதல் வேண்டும். இந்த நெறி நின்றூரே விரைவில் திருவருட்பேறு பெற்று நலம் பெறுவர்.

"ஒரு நெறிய மனம் வைத்துயர் ஞானசம்பந்தன்" என்று, ஆளுடைப் பிள்ளையார் அருளிச் செய்ததையும் உன்னுக.

இவர் இத்திரு நெறியிற் றிறம்பட நின்றவர் ஆதலின்

..................."பேணுநீற்றுச் சைவநெறி
ஒருமைநெறிவா முந்தணர்தம் ஓங்கு குலத்தினுள்வந்தார்"

என்று சேக்கிழாரடிகள் இவரை இனிது இசைக்கின்றனர்.

இவர் நாடோறும் சிவபூசையின் முடிவில் சிவாக்கினி வளர்க்கும் நியமம் பூண்டிருந்தனர். சிவாக்கினி வளர்ப்பதனுல் கலியின் வெம்மை தணியும் என்க. இவ்வண்ணமே மகா சைவராகிய அப்பூதியடிகளும் சிவவேள்வி புரிந்தனர் என்று அறிக.

"அஞ்சிப் போய் கலிநலிய அழலோம்பும் அப்பூதி"

என்று அப்பரடிகள் அருளிச்செய்தனர்.

இவர் தூய்மையில் தாம் வளர்க்கும் நெருப்புக்குச் சமானமானவர்.

அபிடேகம் பெற்றவர் ஆதலின் வைகறை, உச்சி, மாலை, நடுஇரவு என்ற நான்கு வேளைகளிலும் வழிபாடு செய்யும் நியதியுடையவர் இவர்.

இந்த நியதி வழுவாதிருக்கும் பொருட்டே, தண்ணீரால் விளக்கெரித்த இரவு, திருவாரூரினின்றும் ஆறுகல் தொலைவில் உள்ள தமது ஊர் சென்று வழிபட்டு அமுது செய்தார் என்று வரலாறு கூறுகின்றது.



மணலிக்கு இறைவர் திருவோலக்கம் செய்த அன்றும் நடு இரவில் தமது இல்லஞ் சென்று சிவபூஜையும் தீவேட்டலுஞ் செய்தனர் என்பதையுஞ் சிந்திக்க.

இவரது பெருமை அளவிடற் கரியது. அடியில் வரும் தீந்தமிழ்க் கவியால் இதனை உணர்க.

வாய்மை மறைநூல் சீலத்தால் வளர்க்குஞ் செந்தீ யெனத்தகுவார்
தூய்மைத் திருநீற் றடைவேமெய்ப் பொருளென் றறியுந் துணிவினர்
சாமகண்டர் செய்யகழல் வழிபட் டொழுகுந் தன்மையினில்
யாம இரவும் பகலுமுணர் வொழியா இன்ப மெய்தினர்.

சிவனையே பாடுந் திருவாயுடைய சிவஞான குருமூர்த்திகளாகிய திருநாவுக்கரசு நாயனர், திருஞானசம்பந்தப் பிள்ளையார், என்ற இரு பெருங்குரவர்களும் இவரைச் சிறப்பித்துப் பாடியருளினர்கள் என்றால் இவருடைய திருத்தொண்டின் சிறப்பு சொல்லுந் தரத்ததோ?

தாவியவ னுடனிருந்துங் காணுத தற்பரனை
ஆவிதனி லஞ்சொடுக்கி அங்கணனென் றாதரிக்கும்
நாவியல்சீர் **நமிநந்தி யடிகளுக்கு** நல்குமவன்
கோவியலும் பூவெழுகோற் கோளிலியெம் பெருமானே.

—திருஞானசம்பந்தர்.

## அரனெறி

திருவாரூர்ப் பெரிய கோயில் பூங்கோயில் எனப்படும். அப்பெரிய கோயிலுக்குள், அக்கினி மூலையில் தனிக் கோயிலாக விளங்குவது "அரனெறி" என்ற கோயில். இக்கோயிலே நமிநந்தி யடிகள் தண்ணீர் விளக்கெரித்த சிறப்புடையது. மேற்குப் பார்த்த சந்நிதி. மிகவும் அழகிய மூர்த்தி.

## திருவிளக்கிடுதல்

திருக்கோயிலிலே விளக்கிட்டவர்க்கு மெய்ஞ்ஞான முண்டாகும்.

"விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்நெறி ஞானமாகும்"—அப்பர்.

சிவாலயத்திலே அணையும் பருவத்திலே விளக்கின் திரியை அபுத்தி பூர்வமாகத் தூண்டிய புண்ணியப் பயனால் எலி பலிச்சக்கிரவர்த்தியாகப் பிறந்தது என்பதனுல் விளக்கிட்டார்க்கு வரும் புண்ணியத்தை யறிக.

"...............சொல்லகலின்
நீளுகின்ற நெய்யருந்த நேரெலியை மூவுலகும்
ஆளுகின்ற மன்னவனு யாக்கினையே"

—இராமலிங்கர்.

நமிநந்தியடிகள் பல விளக்குகள் இட்டு இறைவனை வணங்கவேண்டுமெனக் கருதினர். பொழுது போய்விட்ட படியால் ஆறு நாழிகை தொலைவில் உள்ள தமது ஊர் போய் நெய் கொணர்தற்குரிய நேரம் இன்மை குறித்து அருகில் உள்ள வீட்டிற் சென்று நெய் கேட்டனர். சமணர்கள் இகழ்ந்தது கேட்டு மனம் பொருமல், இறைமுன் வருந்தி வீழ்ந்தார். அவருடைய அளவிடற்கரிய அன்புக்காக இறைவர் இரங்கி அருள்புரிந்தனர். திருவருள் துணைகொண்டு நீரால் விளக்கெரித்து இகழ்ந்தவரும் புகழ்ந்துரைக்கத் திருத்தொண்டு புரிந்தனர். உலகங்கள் எல்லாம் அறிந்து வியந்தன.

"நீரால் திருவிளக்கிட்டமை நீணாடறியுமன்றே"

என்று அப்பரடிகள் அருளிச்செய்தமையால் இது விளங்குகின்றது.

## திருவாரூர் பிறந்தார் சிவகணங்கள்

மணலி என்ற ஊர் திருவாரூருக்குத் தென் மேற்கில் நான்கு நாழிகையளவில் இருக்கின்றது. ஆண்டுக்கு ஒரு முறை தியாகேசர் மணலிக்கு எழுந்தருளுவர்.

பிறப்பு இறப்புக்களால் வரும் ஆசௌசம், மகளிர்க்குவரும் தீண்டாமை முதலியவைகளால் ஆலயத்திற் சென்று வழிபட முடியாத மக்கள் அனைவரும் சேவித்து உய்வு பெற இறைவர் திருவீதி உலா வருவர். அவ்வாறு வரும் விழாவில் சேவிக்க வருவோர் அத்தனைபேரும் சிவனடியார்கள். அவர்களை வேருக நினைத்தல் கூடாது. இதனை இறைவரே நமிநந்தியடிகளுக்கு தெளிவுபடுத்தி யருளினர்.

இனி திருவாரூர் பிறந்தார்கள் எல்லோரும் சிவகணங்களாவார் என்பதும் சிந்தித்தற் குரியது. பிறந்தால் மட்டும் போதாது. பிறந்து சிவநெறியில் நின்று வாழவேண்டும் என்ற குறிப்பை தெய்வச் சேக்கிழார்,

"தெய்வப்பெருமாள் திருவாரூர்ப்பிறந்து வாழ்வார் எல்லாரும்
மைவைத் தனைய கண்டரவர் வடிவேயாகி"

என்று கூறியருளியதனல் அறிக.

"வித்தகம்பேச வேண்டா பணிசெயவேண்டும்"

என்று இறைவர் நம்பியாரூரரிடம் தெரிவித்தவாறு, நமிநந்தியடிகள் உள்ளும்புறமும் செய்யவேண்டிய திருத்தொண்டுகள் பலவும் புரிந்து அரிய வாழ்வு பெற்றனர்.





# கற்பு

## காந்திமதி

பாண்டி நாட்டின் தென்பகுதிக்குத் தலைநகராகத் திகழ்வது நெல்லையம்பதி; தெய்வநலமிக்க சைவநலங் கமழுந் தனிச் சிறப்புடையது அப்பழம்பதி; தாமரை மலரின் நடுவே அழகிய மணி விளங்குவதுபோல் நகரின் நடுவே வேய்முத்தருடைய திருக்கோயில் விளங்கும். இல்லை யென்னுது வழங்கும் வள்ளல்கள் பலர் நெல்லையில் இன்றும் வாழ்கின்றனர். அத்திருநகர் அருகே கருணை பெருக்கெடுத்து ஓடுவதுபோல் பொருநை நதி தெளிவாக ஓடும். "என்னைக் காண வேண்டுமாயின் வளைந்து வளைந்து நீண்ட வழிகளிலே சென்று வருந்த வேண்டா; அன்பு நெறியிலே குறுக்கே வந்தால் கண்டு களிக்கலாம்" என்று குறிப்பிடுவார்போல் அமரர் கோவாம் குமரவேள் குறுக்குத்துறையில் வீற்றிருக்கின்றுர். தாமிரபரணி நதி வெள்ளத்தில் முழுகியெழுந்ததும், குறுக்குத்துறைக் குமரன் அருள் வெள்ளத்தில் முழுகலாம்.

பொருநைநதிக் கரையிலே இரண்டு சைவ மரங்கள் முளைத்தன; ஒன்று மாதவ சிவஞான யோகிகள். ஒன்று குமர குருபரர். அப் புண்ணியத் தருக்களில் கனிந்த தீங்கனிகள் இன்று எல்லா உலகங்களையும் வாழ்விக்கின்றன. ஒருதருவில் சிவஞான போதமாபாடியம், சோமேசர் முதுமொழி வெண்பா, அமுதாம்பிகைப் பிள்ளைத் தமிழ் முதலிய பல பழங்கள் பழுத்தன. மற்றொரு தருவில் பழுத்த பழங்கள் கந்தர்கலிவெண்பா; மீனுக்ஷியம்மை பிள்ளைத்தமிழ், முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ்; நீதிநெறி விளக்கம் முதலியன. ஆ! ஆ! இப்பழங்கள் உண்ண உண்ணத் தெவிட்டாதன; பிறவி நோயைக் களைந்து சிவாநுபவத்தைத் தரவல்லன. என்றும் அழுகாமல் தமிழ் மக்களுக்குப் பவப்பசியை யாற்றி சிவத்திருவை நல்கும்.

சங்கர நமச்சிவாயரைத் தமிழுலகுக்கு அளித்தது திருநெல்வேலியேயாகும். இத்தகைய நெல்லைமாநகரில் **சிவனடியாப்பிள்ளை** என்பவர் செல்வமுஞ் சீருந் தழைத்து வாழ்ந்தனர். திருநீறு விளங்குந் திருநுதலும், கண்டிகை தவழும் கந்தரமும், ஐந்தெழுத்துறையும் அருநாவும், கருணை பொழியுங் கண்மலரும் உடையவராய் அவர் காண்பார் கண்களைக் குளிர வைத்தனர். அதிகாலையில் எழுந்து தாமிரபரணி சென்று,

நீராடி நீர் கொணர்ந்து சிவபூஜையில் அமர்ந்தால் உச்சிப் பொழுதுவரை உலகத்தை மறந்திருப்பார். மாலையில் கோயிலுக்குச் சென்றால் அர்த்தஜாமப்பூஜை முடிந்தபின் தான் வீட்டிற்குச் செல்வார். "நெல்லையப்பா! நெல்லையப்பா!" என்று இடையறாது கூறுவார். வந்தவர் இடரை மாற்றுவார்; சந்ததம் சிவனைப் போற்றுவார்; என்றும் மெய்ம்மையே சாற்றுவார்; ஏழைகள் பசியை யாற்றுவார்.

இத்தகைய நற்குணசீலராகிய சிவனடியாப் பிள்ளைக்கு நெடுநாட்களாக மகப்பேறு இன்றி, மாதவத்தின் பயனாய் வேய்முத்தரின் திருவருளால் ஒரு பெண்மகவு பிறந்தது; காந்திமதியென்று பேரிட்டனர்.

சாந்திமதிக் கேந்தசிவ சம்பினரு ளாலுதித்த
காந்திமதி யென்னுமுயர் கண்மணியே கண்வளராய்!
ஆய்ந்த மறைப்பொருளாம் அண்ணலரு ளாற்பிறந்த
காந்தி மதியென்னுங் கற்பகமே கண்வளராய்!
புண்ணியத்தால் வந்துதித்த பூந்திருவே எங்கள்குலக்
கண்ணியமே காந்திமதிக் காரிகையே கண்வளராய்!
பெண்ணுலக மீடேறப் பிள்ளையிலாத் துன்பகல
மண்ணுலகில் வந்த மதிக்கொழுந்தே கண்வளராய்!

என்று அழகாகப் பாடித் தாலாட்டினர். வளர்பிறை மதி போல் காந்திமதி வளர்ந்தாள். நன்கு கலை பயின்றாள். இசைப் பயிற்சியும் அவள்பால் இசைந்தது. திருவனைய உருவுடன் திகழ்ந்தாள். மங்கையர் திலகமாய், மாண்பமைந்த மடக்கொடியாய் விளங்கினாள்.

சிவனடியாப்பிள்ளை தனது ஏகபுத்திரியாகிய செல்வப் புதல்விக்குத் திருமணஞ் செய்யக் கருதினார். செல்வம் மிகுதியாக இருந்தபடியால் மகளுக்கு மணஞ்செய்து மாப்பிள்ளையைத் தனது வீட்டிலேயே இருத்தி வாழ்விக்கவேண்டும் என்று திட்டமிட்டனர். தென் காசியில் குற்றாலலிங்கம் பிள்ளை மகன் **குமாரலிங்கம்** என்பவனுக்குக் காந்திமதியைக் கன்னிகாதானம் செய்துகொடுத்தனர். சாதாரண குடும்பத்தில் பிறந்த குமாரலிங்கம் திருநெல்வேலியில் சிறந்த குடும்பத்தினராகிய மாமனார் சிவனடியாபிள்ளைத் திருமாளிகையிலேயே தங்கி அறிவின் கருவூலமாக விளங்கும் தன் அரிய மனைவியுடன் வாழ்வானாயினன்.

குமாரலிங்கம் நற்குணம் அமையப் பெறாதவன்; துர்க்குணக் குவியல்; காமாதுரன். நாடோறும் பரத்தையர் வீடு



கட்குப் போய்வருவான். கள்ளுண்டு பலராலுந் தள்ளுண்டு நடப்பான். குணக்குன்றமாகிய மனைவியை வைவான்; அடிப்பான். அவளுடைய நகைகளைக் கொண்டுபோய் வேசிகட்குப் பாதகாணிக்கையாகத் தருவான். அவன் வீட்டிற்கு வரும்போதெல்லாம் அமர்க்களந்தான். கையில் கிடைத்ததை எடுத்துக் கொண்டு விலைமகளிர் வீடுகட்கு ஓடுவான். பல தினங்கள் அவர்கள் வீட்டில் தங்கி, அவர்கள் வாக்கை வேத வாக்காக எண்ணி, அவர்கள் இட்ட ஏவலை தெய்வ கைங்கரியமாக எண்ணிச் செய்வான்.

காந்திமதி கவலைக் கடலில் மூழ்கினாள். சிறந்த இல்லறத்தை நடாத்தி நாட்டுக்கு நலஞ்செய்ய எண்ணிய அவள் வாழ்வு இவ்வாறு தாழ்வுற்றது. அவள் மனதில் எண்ணிய எண்ணங்கள் எல்லாம் பகல் கனவாகிவிட்டன. விதியை நொந்து நொந்து மனம் வெந்தாள். பெண்ணாய்ப் பிறத்தலே பெரும்பாவம் என்று சலித்துக்கொண்டாள். கணவனுடைய அட்டூழியச் செயல்களை எண்ணுந்தொறும் அவள் கண்கள் கரைந்து கரைந்து ஆறாய்ப் பெருகின.

ஒருநாள் மெல்ல தனது நாயகனை நோக்கி, "என் ஆருயிரனைய அன்பே! ஏன் இப்படி என்னை வெறுக்கின்றீர்? என் உடல் பொருள் உயிர் யாவும் தங்களுடையனவே. தாங்கள் எதைவேண்டுமானாலும் எடுத்துக்கொள்ளுங்கள். என்னிடம் அன்பாகமட்டும் இருங்கள். எனது தந்தையார் என்னைப் பெறுவதற்கு எவ்வளவோ காலம் தவஞ் செய்தாராம். செல்வமாகப் பெற்றுவளர்த்த என்னை நீங்கள் அடிப்பதும் வைவதும் நியாயமாகுமா? அடித்தாலும் அடியுங்கள். ஒரு வேளையாவது அணைக்கவேண்டாமா? ஒரு கை அடிக்கவும் மற்றொரு கை அணைக்கவும் இருந்தால் நான் மனம் வருந்தேன். கற்பு நெறியனைத்தும் உணர்ந்த நான் தங்களைக் கண்கண்ட கடவுளாக நினைத்திருக்கின்றேன். இதோ பாருங்கள். என் உடம்பெல்லாம் தழும்பாகியுளது. தங்கள் மனம் என்ன இரும்பா? கல்லா? கரும்பு போன்ற மனைவியைத் துரும்பாக எண்ணலாமா? சென்றது சென்றாலும் இனியாவது தாங்கள் மனதைத் திருப்பிக்கொள்ளுங்கள். மணஞ் செய்த என்னைக் குணஞ் செய்து ஆதரியும்" என்று வேண்டிக் கண்ணீர் வடித்தாள்.

குமாரலிங்கம், "சீ நாயே! படுநீலி! என்னை ஏமாற்றப் பார்க்கின்றாயோ? மூதேவி! உனக்கு பணக்காரன் மகள் என்ற

அகந்தையா? உன் வீட்டுக்கு வந்திருக்கின்றேன் என்றும், உன் அப்பன் தேடிய உண்டியையும் உடையையும் நான் எதிர் பார்த்திருக்கின்றேன் என்றும் மமதையா? ஏதாவது பேசினால் உன்னையும் உன் அப்பனையுங் கொலை பண்ணிவிட்டு தூக்கு மேடை மேல் ஏறுவேன். என்னை ஏமாற்ற உன்னால் ஆகாது. காமதேனுவின் பாலைக் குடிக்கின்ற நான் கழுதைப் பாலைக் குடிப்பேனா? அதிகமாகப் படித்திருக்கின்றோம் என்ற அகங்காரத்தால் என்னை இப்படிப் பேசுகின்றாயா? மாயக்காரி! பல்லை உடைப்பேன். காதிலே இருக்கின்ற கம்மலைக் கழற்றிக் கொடு" என்று ஓங்கி அறைந்தான். காந்திமதி கண்ணீர் சொரிந்த வண்ணமாக அடிக்கு அஞ்சி வைரத் தோட்டைக் கழற்றித் தந்தாள்.

பூஜை செய்துகொண்டிருந்த சிவனடியாப் பிள்ளைக்கு மனந் தாங்கவில்லை. "என்ன இது அநியாயம்? இது தெய்வத்திற்கு அடுக்குமா?" என்று பதறிக் கதறிக்கொண்டே வந்தார். வயது முதிர்ந்த அவரை ஒரு அறைகொடுத்துக் கீழே தள்ளிவிட்டு புலிபோலே பாய்ந்து வெளியே சென்றான்.

இப்படியாக வரவர அவனுடைய அட்டகாசம் அதிகரித்துக்கொண்டே வந்தது. அருங்கிளியை வளர்த்துப் பெரும் பூனை கையில் தந்தது போல் சிவனடியாப் பிள்ளை ஆருத்துயர முற்றார். அதே கவலையால் ஊணும் உறக்கமுந் துறந்து சிவனடி சார்ந்தார். தாயாரை முன்னமே யிழந்த காந்திமதியை உறுதுணையாக நின்ற ஒப்பற்ற தந்தையும் பரகதியடைந்த வேதனை மிகமிக வருத்தியது. நெருப்பின் மேல் கிடந்து துடிக்கும் நீள் புழுவைப் போல் துடித்தாள். கண்ணீர் வடித்தாள். சிறகு ஒடிந்த பறவை போலாயினாள்.

குமாரலிங்கத்திற்கு மாமனார் இறந்தது மகிழ்ச்சியைத் தந்தது. "இனி அவன் தானே எல்லாச் சொத்துக்கும் அதிகாரி. ஒரு சிறிது இருந்த அச்சமும் அகன்றது. மனம் போல் நடக்கும் அவனுக்கு விடுதலை கிடைத்தது போலாயிற்று. மனைவியை ஓயாது இம்சித்து வீட்டிலுள்ள பண்டங்கள் பாண்டங்கள் யாவும் கொண்டுபோய் தொலைத்தான். இனி வீடும் நிலமுந்தான் எஞ்சிநின்றன. அவை மனைவி மீது இருந்தபடியால் விற்கமுடியாது திகைத்தான். ஒருநாள் வீட்டையும் நிலத்தையும் விற்கவேண்டி மனைவியைக் கையெழுத்துப் போடுமாறு வற்புறுத்தினான். அவள் மறுத்தாள், உடனே



நரசிங்காவதாரம் போல் குதித்தான். காலால் அவளை மிதித்தான்; மிகவுங் கொதித்தான். தன் இடுப்பில் இருந்த தோல் கச்சத்தால் மாறிமாறி அந்த மாதரசை அடித்தான். அவள் உடம்பெல்லாம் உதிரம் வழிந்தது.

"உன்னைக்கொன்று விட்டு இந்த வீட்டையும் நிலத்தையும் விற்கின்றேன். நான் ஒன்றுக்கும் அஞ்சமாட்டேன். இன்று இரவு பார்; உன்னை என்ன செய்கின்றேன். உனக்கு இத்தனைப் பிடிவாதமா? அடியே! உன்னை இந்த மட்டோடு விட்டேன் என்று எண்ணாதே. அவசரமாகப் போகின்றேன். பிறகு வந்து வட்டியும் முதலுமாகச் சேர்த்துத் தருவேன்!' என்று கர்ஜித்துவிட்டுச் சென்றான்.

காந்திமதிக்கு மனம் உடைந்துவிட்டது; வாழ்வு கசந்துவிட்டது. கணவனையும் உயிரையும் வெறுத்தாள். கணவனாகிய காதகன் கரத்தால் அடிபட்டு மாள்வதைவிடத் தானே உயிரை மாய்த்துக்கொள்ளுதல் நலம் என்று கருதினாள். பலப்பல வாறு அவள் மனம் சுழன்றது. தன் பெட்டியைத் திறந்தாள். ஒரே ஒரு வைர மூக்குத்தி பெட்டியில் இருக்கக் கண்டாள். தன் உயிரைப் பிரிக்க அதுவே கருவியென்று கொண்டாள். அந்த வைரத்தைப் பொடித்து தண்ணீரில் கலந்தாள். மாள்வதற்கு முன் பிரார்த்தனை செய்யவேண்டும் என்று உறுதி கொண்டாள்.

பூஜை வீட்டிலே போய் "பார்வதி பங்கா! கருணாமூர்த்தீ! என்போன்று பெண்ணாய்ப் பிறந்து பொல்லாத ஆண்களின் கையிற் சிக்கி எத்தனை பேர் பரதவிக்கின்றார்களோ? ஐயனே! எனக்கு மட்டுமன்று. என்போல் துன்புறுகின்ற அத்தனைப் பெண்களுக்கும் நீ விடுதலை தந்து காத்தருளும். பெண்ணென்றால் பேயும் இரங்குமே! காரைக்கால் அம்மையாருக்கு அருள் புரிந்த நீ என் விஷயத்தில் ஒருசிறிதும் கருணை புரிந்தாயில்லை. உன மனங் கருங்கல்லாக மாறிவிட்டதா? நான் இனி இருந்து என்ன பயன்? ஒரு நாளாவது கணவனோடு சுகப்பட்டேனில்லை. சுகம் வேண்டாம். துக்கப்படாம லிருந்தாலும் போதுமே. கொசு பறக்கின்ற ஓசையும், எறும்பு நடக்கின்ற ஓசையும் உன் காதில் கேட்குமே. என் முறையீடுமட்டும் கேட்கவில்லையா? உன் காது என் தீவினையால் செவிடாகி விட்டதா? ஏழை பங்காளா! என் உடம்பெல்லாம் பஞ்சாகி நொந்துவிட்டதே. என் செய்வேன்? உன் திருவடியை நாடி

வருகின்றேன். ப்ரமகருணாநிதியே. மறுமையிலாவது எனக்கு இன்பத்தைக் கொடுப்பாய். பெண்களைச் சித்திரவதை புரியுந் தீய ஆடவர்கட்கு நல்லறிவைத் தருவாயாக" என்று சிவபெருமானை வேண்டி யழுதாள். பெருங் கவலையால் அழுது அழுது மூர்ச்சித்துவிட்டாள்.

நடு இரவு; பாதகனாகிய குமாரலிங்கம் வீட்டிற்கு வந்தான். குடி மயக்கத்தால் அறிவு கலங்கி யிருந்தான். நாவரண்டிருந்தது. வைரத்தை உடைத்துக் கலந்திருந்த தண்ணீரைக் குடித்தான். சிறிது நேரத்திற்கெல்லாம் கீழே வீழ்ந்து புரண்டான். அவன் செய்த அநீதிக்கு முடிவு காண்பான்போல் உயிர் துறந்தான்.

மூர்ச்சை தெளிந்து எழுந்த காந்திமதி தான் வைத்த வைரத் தண்ணீரைப் பார்த்தாள். இல்லை. சுற்று முற்றும் பார்த்தாள். கணவன் மாண்டிருக்கக் கண்டாள். தான் வைத்த அதனை யறியாது உண்டு மாண்டதாகக் கருதினாள். ஒன்றும் அறியாது திகைத்தாள். உலகமே இருண்டதுபோல் தோன்றியது. தன் வாழ்வு முடிந்ததாக எண்ணினாள். அவளுக்கு அழுகை வரவில்லை. அவள் உருகிய உள்ளம் இறுகியது. தனக்கு விடுதலை கிடைத்ததாகக் கருதினாள்.

இறைவனைச் சிந்தித்தவண்ணமாக அசைவற்றிருந்தாள். மயங்கி வீழ்ந்தாள்.

காவி அங்கியும், உடம்பெல்லாம் திருநீறும், உருத்திராக்கத் தாழ்வடமும், கையில் ஜெபமாலையும், பாதக்குறடும், சடைமுடியும், மலர்ந்த முகமும், குளிர்ந்த பார்வையும் உடைய ஒரு சாதுவைக் கண்டாள். வணங்கினாள். "பெருமானே! யான் என்ன பாவஞ் செய்தேனோ? என் விதியின் கதி இங்ஙனம் ஆயிற்று" என்றாள்.

"அம்மா! வருந்தற்க. நீ முற்பிறப்பில் வட மதுரை. நன்றாகக், கலைபயின்று பண்டிதையாக இருந்தனை. அக்கால் உன் கணவனை அவமதித்தனை. அவன் பலகாலும் உன்னை வேண்டியும் அவனுடன் வாழாது வெறுத்தனை. அவன் மனம் நொந்து நொந்து வெந்தான். நீ கூடாவொழுக்கத்தினால் தன்னை வெறுப்பதாக அவன் உன்னை ஐயுற்றான். உன் கடிதங்களையும் நூல்களையும் புரட்டிப் பார்த்தான். அதில் நீ மங்கைப் பருவம் அடைந்தபோது உன்னை ஆணுருவத்தில் சிங்காரித்து எடுத்த படம் இருக்கக்கண்டான். அதை உனது

உ
முருகா

# ஸ்ரீ முகிலார் திரு

(முன்தொடர்ச்சி)

## முகில் 1..........பெயல் 3.

## உலகம்

சிவபரஞ்சுடர் படைத்தல், காத்தல், துடைத்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களையும் சுத்தமாயையில் தாமே செய்வர்; அசுத்தமாயையில் அநந்தேச்வரரை (1)யதிஷ்டித்து நின்று செய்வர். ப்ரக்ருதியில் அநந்தேச்வரர் வாயிலாய் ஸ்ரீகண்டருத்ரரை யதிஷ்டித்து நின்று செய்வர். இப்ரபஞ்சம் ப்ரக்ருதிக் குட்பட்டதாதலால், சிவபெருமான் அநந்தேச்வரர் வாயிலாய் ஸ்ரீகண்டருத்ரரை யதிஷ்டிக்க, அந்த ஸ்ரீகண்டருத்ரர் நான்முகனை யதிஷ்டித்து நின்று உலகத்தைப் படைத்தனர். இவ்வுலகம் விண்ணுலகம், மண்ணுலகம், கீழுலகம் என மூவகைத்து. இவற்றுள் விண்ணுலகத்தில் வதிபவர் தேவர்; அத்தேவர்கள் துன்பம் என்பதை ஓர் சிறிதுமறியாது இன்பம் ஒன்றையே பல்லாற்றானும் (2)ஆரத்துய்ப்பர்; மண்ணுலகத்தின் மன்னி வாழ்பவர் மக்களாவர்; இம் மக்களாயி

---

படம் என்று எண்ணாது உன் ஆசை நாயகன் படம் என்று கருதி உன்மீது சினந்தான். தான் ஏற்கனவே கொண்டிருந்த சந்தேகம் வலிமையுற்றது. அதனால் அவன் வெறுத்து உன்னை நஞ்சையூட்டிக் கொன்றுவிட்டான். அவன்தான் மீண்டும் இப்பிறப்பில் கணவனாக வந்தான். முற்பிறப்பில் நீ அவனை வெறுத்த காரணத்தினால் இப்பிறப்பில் அவன் உன்னை வெறுத்தான். உன்னை நஞ்சூட்டி மாய்த்த பாவத்தினால் அவன் வைரத்தையுண்டு மாய்ந்தான். ஆதலின் நீ கவலாது நன்னெறிநின்று நலம் பெறுக" என்று சொல்லி மறைந்தனர்.

காந்திமதி மயக்கந் தெளிந்து எழுந்தாள். தான் கண்டது கனவு என அறிந்தாள். கனவில் இறைவன் தனக்கு உணர்த்திய திருவருளை நினைந்து தேறினாள். "முற்பகல் செய்யில் பிற்பகல் விளையும்" என்ற பழமொழியை யுன்னினாள். பொழுது விடிந்தது. கணவன் உடலை அடக்கஞ் செய்வித்தாள். தனது உடைமைகளை யெல்லாம் தானஞ் செய்தனள். தவவொழுக்கத்தில் நின்று நற்கதியுற்றாள்.

---

1. அந்தர்யாமியாயிருந்து. 2. முழுதும் செவ்வையாயநுபவிப்பர்.

னோர் இன்பதுன்பங்கள் இரண்டையுங் கலந்து (1) நுகர்வர்; கீழுலகத் துழல்பவர் நரகராவர். இந் நரகர் இன்பம் என்பது (2) இனைத்தென வோர் சிறிதுங் காணுது துன்பம் ஒன்றனையே துய்த்துழல்வர். இத்தகைய உலகங்கள் மூன்றனுள் மண்ணுலகமே சிறந்ததாம்.

ஈண்டுக் கூறிப் போந்தவற்றுள், நுங்களுள்ளத்துள் ஓர் ஐயப்பாடு முகிழ்க்கலாம். அஃதாவது, இம் மண்ணுலகம் உயிர்கள் இன்ப துன்பங்களை விரவி நுகர்தற் கிடனுயது. வானுலக மென்றுலோ இன்பமொன்றனையே இடையருது ஆரத்துய்க்கும் (3) துய்ப்புக்களனுயது. ஆதல் பற்றி இம்மண்ணுலகத்தினும் அவ் விண்ணுலகமே யேன் சாலச் சிறந்ததாகாது? என்பதுவேயாம். இவ் (4)வயிர்ச்சியை யொழித்துப், பதி, பசு, பாசம் என்ற முப்பொருள் விளக்கத்தையும், மக்களாகிய நாம் இப் பாரின்கண் ஏன் பிறந்தோம்? எவ்வாறு பிறந்தோம்? பிறந்து யாம் செயக்கடவ யாவை? என்பவற்றையும், சைவசமய வொழுக்கங்களையும், அறன் வலியையும், இல்லற வொழுக்கங்களையும் நுங்கட்கு இவ் விராப் போழ்தில் கதை சொல்வதா யெடுத்துக்கொண்ட **'முகிலூர்தி'** என்ற **'ஜீமூதவாஹநன்'** என்னுமோர் வித்யாதரச் சக்ரவர்த்தியின் கதையின் கண் (5) அதரறிந்து இடை இடையே கலந்து சுருங்கச் சொல்லுதூஉம். ஏனெனின் சைவசமய நெறிக்கட்பட்ட, மூன்றும்படியாகிய, நிர்வாண தீக்ஷை பெற்றுக்கொண்டாற்றுன் 'சிவஞானபோதம்' முதலிய சைவஸித்தாந்த நூல்களை வரலாற்று முறைப்படி யோதித் தெளிதற் குரிமையுண்டாகும். ஆதலின், நீங்கள் கதை கேட்கு மினிமையால் நுங்களுள்ளத்துள் ஊக்கம் பிறக்குங் குறிப்பறிந்து, அவ்வரு நூற்பொருளைக் கோடற்காகக் கதையொடு கதையாய்க் கலந்து கழறுதூஉம். கருத்தாய்க் கேட்டு மனத்துட் பதியவைத்துக் கொண்மின். ஈண்டு மண்ணுலகத்தின் மாண்பை விளக்குதூஉம்.

இம் மண்ணுலகத்தின்கட் பிறந்த மக்களாயினோர் (6)மெய்யறிவிலராய் அறம், வேள்வி முதலிய நல்வினைகளைப் புரிந்து, அதன் பயனுகப் பொன்னுல கெய்தி யும்பரா யின்பங்களை நுகர்ந்து, அந் நல்வினையினளவு தேய்ந்தொழிந்தபின் (7) ஐவகைத் தீயின் வழியாய்த் திரும்பவும் இம் மண்ணுலகத்தின் கண்ணே வந்து பிறக்கின்றனர். ஆதலினுனே அவ் விண்ணுலகு ஒருபோதும் நிறைகின்றதின்று. இஃதன்றி, ஆண்டிருந்தவாறே பேரின்ப மெய்துதற் கிடனுமின்று. இன்னும், இம் மண்ணுலகத்தினின் நீட்டிய தீவினைப் பயனுய்க் கீழுலகஞ்

1. அநுபவிப்பர். 2. எப்படிப்பட்டதென்று. 3. அநுபவித்தற்கேற்ற போகபூமி. 4. சந்தேகத்தை. 5. இடமறிந்து.
6. உயிர்வீடு பேறடைதற்கான வழியைத் தேடும் பக்குவப்பட்ட உண்மை யறிவு. 7. சூர்யாக்நி, மேகாக்நி, புவியக்நி, புருஷாக்நி, யோஷிதக்நி ஆகிய பஞ்சாக்நி.

அருட்பெருஞ்ஜோதி தனிப்பெருங்கருணை

# வள்ளலார் கண்ட தெள்ளமுதம்

M. N. தங்கவேலு பிள்ளை, மணமேடு
[முன்னுள் ஈங்கோய்மலை தருமபரிபாலகர்]

அருட்பெருஞ்சோதியாய் விளங்கும் இறைவன் உலகம் யாவையும் தாமுளவாக்கலும், நிலைபெறுத்தலும், நீக்கலுமாகிய நீங்கலா அலகிலாத் திருவிளையாட்டினை நிகழ்த்திவருகின்றுன். உலகம் தீ நெறிப்படுங்கால் அப்பிழை நீக்கி நன்னெறிப்படுத்த அடியவர்கள் இறையருளால் அவதரிக்கின்றனர். அங்ஙனம் தோன்றிய ஓர் ஒப்பற்ற ஞானச் சுடரே நம் இராமலிங்க அடிகளாவர். வள்ளல்கள் எங்ஙனம் கருணையால் அள்ளி அள்ளிக் கொடுத்தனரோ அவ்வண்ணமே அடிகளாரும் கருணை பொழிந்து முகமுமலர்ந்து அருட்பெருஞ்சோதி இறைவன் நிலையினைத் தம் பாமாலைகளால் தொடுத்து உலகுக்கு உவந்து சென்று, (1) பவ்வீக்குழிப் படிந்து, இடையருத் துன்ப மொன்றையே துய்த்துழன்று, தீவினையினளவு தேய்ந்தவுடன் இந் நிலவுலகத்தின் கண்ணே வந்து பிறக்கின்றனர். இம் மண்ணுலக மென்றுலோ! நல்வினை தீவினைப் பயன்கள் இரண்டையும் (2) ஒருங்கே துய்த்து ஆண்டானடிமைத் திறத்தால் சிவத்தை வழிபட்டு (3) மலபரிபாகம், (4)சத்திநிபாதம், (5) இருவினை யொப்புக்க ளெய்தப்பெற்றுச் சிவத்தோ டிரண்டறக் கலத்தலாகிய (6) பேரின்பத்தை மக்கட் குதவு மாண்புடைத்தாகும். இத்தகு பெற்றியினுலன்றே இம் மூவுலகத்துண் மண்ணுலகமே மாணச்சிறந்ததென்று ஆன்ருேரறைகுப. இவ் வுண்மையை,

"புவனியிற் போய்ப்பிற வாமையி னுைம்
போக்குகின் ருேமவ மேயிந்தப் பூமி
சிவனுய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கித்
திருப்பெருந் துறையுறை வாய்திரு மாலாம்
அவன்விருப் பெய்தவு மலரவ னுசைப்
படவுநின் னலர்ந்தமெய்க் கருணையு நீயும்
அவனியிற் புகுந்தெமை யாட்கொள்ள வல்லாய்!
ஆரமு தேபள்ளி யெழுந்தரு ளாயே"

என்று வாதவூரடிகள் திருவாய் மலர்ந்தருளிய திருவாசகத்தின் கண்ணதாய திருப்பள்ளியெழுச்சியிற் பிரக்கக் காணலாம். இம் மண்ணுலகம் ப்ரஹ்மாண்டத்தின் ஓர்பகுதியாகும். ஆயிரங்கோடி அண்டங்களுள் நாம் வைகும் இப்ரஹ்மாண்டத்தின் அகட்டு ளடங்கிய மூவுலகங்களின் அமைப்பைப் பற்றி யீண்டுக் கூறுதும். (தொடரும்)

1. நரகக்குழி. 2. ஒன்றுய் முழுது மநுபவித்து. 3. வினையினீக்கம் (உண்மாசு ஒழிதல்) 4. அருட்சக்தி மனத்துட் படிதல். 5. நல்வினை தீவினைகளாகிய இருவினைகளுஞ் சமமாய்த் தேய்ந்தொழிதல். 6 மோக்ஷம்.

அளித்ததால் அன்னவரை வள்ளலார் என உலகம் போற்றிய தில் வியப்பு ஒன்று மிலது; வள்ளலார் தமது அருள்விளக்க மாலையில், தாம் கண்டு அனுபவித்த ஓர் தெள்ளமுதினை நமக்கும் தருகின்றார். அவ்வமுதினை தூலம், சூக்குமம் ஆகிய இரு நிலைகளில் கண்டு களிக்கலாம். அப் பாடல் வருமாறு:—

தனித்தனி முக்கனி பிழிந்து வடித்தொன்றாக் கூட்டிச்
சர்க்கரையும் கற்கண்டின் பொடியுமிகக் கலந்தே
தனித்த நறுந்தேன் பெய்து பசும்பாலும் தேங்கின்
தனிப்பாலுஞ் சேர்த்தொரு தீம் பருப்பிடியும் விரவி
இனித்த நறு நெய்யளைந்தே யிளஞ்சூட்டினிறக்கி
எடுத்த சுவைக் கட்டியினு மினித்திடு தெள்ளமுதே!
அனித்தமறத் திருப்பொதுவில் விளங்கு நடத்தரசே!
அடிமலர்க்கென் சொல்லணியா மலங்கலணிந்தருளே.

இப் பாடலுக்கு சாதாரணமாக தூல நிலையிலேதான் பொருள் கூறப்படுகிறது. அது வருமாறு:—

முக்கனி:—வாழை, மா, பலா ஆகிய முக்கனிகளையும்,

தனித்தனி பிழிந்து:—தனித்தனியாகப் பிழிந்தெடுத்து,

வடித்தொன்றாக் கூட்டி:—அந்தச் சாறுகளை வடித்து ஒன்று சேர்த்து,

சர்க்கரையும், கற்கண்டின் பொடியுமிகக் கலந்தே:—சர்க்கரையும், கற்கண்டுப் பொடியும் மிகுந்த அளவில் கலந்து,

தனித்த நறுந்தேன் பெய்து:—கலப்பற்ற கொம்புத் தேனையும் சேர்த்து,

பசும் பாலும், தேங்கின் தனிப் பாலும் சேர்த்து:—சுத்த மான ஆவின்பாலும், நீர் விடாது பிழிந்த நல்ல தேங்காய்ப் பாலும் சேர்த்து,

ஒரு தீம் பருப்பிடியும் விரவி:—அதிலே ஓர் பிடியளவு இடித்துப் பொடி செய்த வாதாமி முதலிய உயர்ந்த பருப்புக் களின் பொடியையும் தக்கபடி சேர்த்து

இனித்த நறு நெய்யளைந்தே:—இனிமையாகிய புத்துருக்கு நெய்வார்த்து,

இளஞ்சூட்டின் இறக்கி—(அடுப்பேற்றிக் கிண்டும்போது) பதம் முற்றிவிடாமல் இளஞ்சூட்டில் பாகுபதத்தில் இறக்கி,

எடுத்த சுவைக்கட்டியினும்—இங்ஙனம் தயார் செய்த ஓர் தீஞ்சுவைக் கட்டியைவிட மேன்மையாக,

இனித்திடு தெள்ளமுதே:—சுவை தரும் சிறந்த அமுதமே!

அனித்தமறத் திருப்பொதுவில்:—நித்தியமாகப் பொது வம்பலமாம் பொன்னம்பலத்தே,

விளங்கு நடத்தரசே:—அடியவர் காண விளங்குகின்ற நடராஜப் பெருமானே!

என் சொல்லணியாம் அலங்கல்:—அடியேனுடைய பாமா லையை,

அடிமலர்க்கு அணிந்தருளே:—நின் திருவடிகளில் **அணிந்து அருள் செய்யவேண்டும்.**



**இங்ஙனம் தூலப் பொருளில், உரை பகர்தல் சாலப் பொருத்தமுடையதே. ஏனெனில் ஒருவன் கண்டும், கேட்டும், அனுபவித்தும் உணர்ந்த ஓர் பொருளை உவமானமாகக் காட்டி உவமேயத்தை விளக்குவது மரபு. அதுபோலவே உலகவர் கண்டு, உண்டு களிக்கும் பல இனிய பொருள்கள் கலந்த ஓர் சுவைக் கட்டியினை உவமானம் காட்டி, உவமேயப் பொருளாகிய இறைவன் அதினினும், மேலான சுவையளிக்க வல்லான் என்று கூறுவது வழுவின்பால் பட்டதன்று.**

ஆயினும், அடிகளார் நிலையை உன்னிப் பார்க்கும் போது இதற்கு சூக்குமப் பொருள் ஒன்று இருந்தேயாகவேண்டும் எனக் கொள்ள இடமுண்டு. வேத, சாத்திரங்களின் பொரு ளாக இறைவன் உளன் என்பது யாவரும் ஒப்ப முடிந்த உண்மை. சைவ உலகிற்கே பெருமை தருவதும், சைவசம யத்தை எக்காலத்திலும் நிலைநிறுத்துவதும், பன்னிரு திரு முறைகளும், சைவசித்தாந்த நூல்களும், திருப்புகழும் எங் நாட்டினரும் ஒப்ப உலகம் போற்றும் உத்தமர் வள்ளுவர் தந்த திருக்குறளும் ஆகும். இவற்றை ஆகு பெயராக உவமானப் பொருள்களின் மீது ஏற்றி இறைநிலையை விளக்குகின்றார் நம் அருட்பெருஞ்சோதி வடலூர் வள்ளலார். அது வருமாறு காண்க:—

தனித்தனி முக்கனி பிழிந்து—தனித்தனியே அப்பரும்; சுந்தரரும், சம்பந்தரும் பாடிய தேவாரப் பாக்களாகிய "மூவ ரோதிய" தமிழின் இன்சுவையைப் பிழிந்து (**1 முதல் 7வரை உள்ள திருமுறைகள்**) வடித்து—(அவற்றுள் நிலப்பகுதியின் சிறப்பினைக் கூறும் பகுதியாகிய கோதினை நீக்கி) அருட்பகுதியை மட்டும் பிரித்தெடுத்து, சர்க்கரை:—சிவஞானபோதம் முதலிய சைவ சித்தாந்த சாத்திரம் பதினான்கின் உட்சுவையையும், கற்கண்டின் பொடியுமிகக் கலந்தே:—திருவள்ளுவர் திருவாய் மலர்ந்தருளிய திருக்குறளின் அறத்தின் நுட்பங்களையுஞ்சேர்த்து, தனித்த நறுந்தேன் பெய்து:—திருவாசகமாகிய தேமதுரத் தேனின் சுவையினைக் கூட்டி (**8ம் திருமுறை**)

(குறிப்பு:—"**திருவாசகமென்னும் தேன்**" என்பதையும் உன்னுக)

பசும்பாலும்:—அருணகிரிநாதர் அருளிச்செய்த 16000 (பதினாறுயிரம்) திருப்புகழையும்,

(குறிப்பு:—"எம் மருணகிரிநாதர் ஓது பதினாறுயிரந் திருப்புகழமுதுமே"—விரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ் அமுது—பால்)

தேங்கின் தனிப் பாலும்:—தேங்காயை உடைத்துத் திருகி எடுப்பதுபோன்ற, ஆகமங்களின் சாரமாகச் சிவயோக நெறி யால் அறியத்தக்க கடினமான திருமந்திரத்தையும் (10ம் திரு முறை) கலந்து,

ஒரு தீம் பருப்பிடியும் விரவி:—திருவிசைப்பா, திருமுகப் பாசுரம் முதலிய பிரபந்தம் நாற்பது இவற்றின் நுண்பொருளை ஆய்ந்தறிந்தும் (இவை முறையே 9, 11ம் திருமுறைகளாகும்) இனித்த நறு நெய்யளைந்தே:—இனிமையாகிய *பெரிய புராணமாம் சுவை மிக்க நெய்யின் இன்சுவையும் கலந்து(12ம் திருமுறை), ஒன்றுக் கூட்டி:—இங்ஙனம் தாம் ஆய்ந்து கண்ட ஞானஅறிவினை, சிவஞானத்துடன் ஒன்று சேர்த்து இளஞ்சூட்டின் இறக்கி:—இங்ஙனம் ஜீவான்ம அறிவு பரமான்மாவுடன் ஒன்றும் போது நிட்டை நிலையும் கூடுமாதலால் அவ்வமயம் சூடு தோன்றும் (மூலக் கனல்) அந்நிலையிலே நின்று காணும்,

எடுத்த சுவைக் கட்டியினும்:—ஆத்மானந்தச் சுவையினும் மேலாக, இனித்திடு தெள்ளமுதே:—இனிமையான பரமானந்தப்பொருளே! திருப்பொதுவில்:—அடியேன் மனமாகிய அம்பலத்தில், அனித்தமற:—நிலையாமை நீங்க நித்தியமாய், விளங்கு நடத்தரசே!—சோதி மயமாய் ஆனந்த நடமாடும் அண்ணலே! என் அரசே!! என் சொல்லணியாம் அலங்கல்—அடியேனுடைய பாமாலையை, நின் அடிமலர்க்கு:—நினது ஊன்றிய திருவடி, இனித்த முடைய எடுத்த பொற்றிருவடி ஆகிய திருவடிக் கமலங்களுக்கு, அணிந்து அருளே—சூட்டிக் கொண்டு அருள்புரிய வேண்டும் என சூக்குமப் பொருளில் தெள்ளமுதச் சுவை கண்டார் வள்ளலார் பெருந்தகை.

இப்படி தாம் கண்ட இன்பம் பெறுக இவ்வையம் எனக் கருணை நோக்குடன் நிறுவினார் சத்தியஞான சபையை வடலூரிலே. இங்ஙனம் கூறிய இன்பம் பொங்கிவரும் வடலூர் சத்தியஞான சபையிலே அமர்ந்து அனுபவித்தோருக்கு.

இச் சத்தியஞான சபையினை, மிகச் சிறந்த முறையிலே, மிகுந்த பொருட் செலவிலே, சிறப்புற கட்டிமுடித்து தூபி நீராட்டு விழாவும் செய்வித்து, ஆனந்தமடைந்து உலகோரும் இன்பமடையத் தன்னலமற்ற சேவை புரிந்தார்கள் உயர் திருவாளர் திருமுருக கிருபானந்தவாரியார் அவர்கள். அன்னார் நீடுவாழ்ந்து சைவசமயத்துக்குத் தொண்டு புரியவும், இன்றைய நிலையில் சைவம் தழைத்தோங்கவும், உலகம் நன்னெறி நின்று உய்யவும் அருள்புரிய வேண்டுமென புண்ணியனை, என் பெரிய பொருளாய் என் அரசாய் விளங்கும் இறைவனை அடியேன் கூறுவது புன்மொழி என்றிகழாதே புனைந்து மகிழ்ந்து அருளே! என்று நடத்தரசின் பெரும்புகழ் சேவடிகளை வணங்கித் துதிக்கின்றேன.

---

*(குறிப்பு:—வெண்ணெ யுருகிய நெய்போல் தம் உடலுமுயிரும் உருகி இறைவனை அடைந்து பேரின்ப வாழ்வினை அடைந்த அடியவர் சரித்திரங்களைக் கொண்டது ஆதலின் பெரியபுராணம் நெய் எனக் கூறப்பட்டது நியாயமே)

## வரப்பெற்றோம்

1. குமாரகுருபரன் (மாதவெளியீடு) ஆண்டுமலர்: வருடச்சந்தா ரூ. 1-8-0, நிர்வாக ஆசிரியர், T.M. குமரகுருபரன் பிள்ளை B.A. B.L., மானேஜிங் டிரஸ்டி, ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் மடம், ஸ்ரீவைகுண்டம்.

2. சீர்திருத்தம்: (மாதமிருமுறை) பொங்கல் மலர்: ஆசிரியர் M.N. முத்துக்குமார சுவாமி பாவலர், விலை 4 அணு. திருப்பாதிரிப்புலியூர்.

3. சமாதியோகம்: சுவாமி சிவானந்தர் எழுதியது. வித்வான் திரு. இ. கே. நடேச சர்மா B O L. மொழிபெயர்ப்பு. விலை ரூ. 5-0-0 சிவானந்தா பதிப்புக் கழகம், ஆனந்தகுடீரம், ரிஷீகேசம், இமயமலை.

4. "அன்பு" வெளியீடு. அலர் க 1. செந்தூரகவல் 2. வெங்கடேச அகவல் 3. முப்பத்து: அலர் 2 குமரப்பத்து—ஆசிரியர் திரு. நா. பிச்சுமணி, தமிழாசான். தென்னிந்திய கல்விக்கழக உயர்தரக்கல்லூரி மாதுங்கா. (பம்பாய்)

5. (1) The Teachings of Bhagawan Sri Ramana Maharshi (2) The Report on the gracious visit of H. H. Swami Sivananda to Ceylon:—K. Ramachandran, 60, Deal Place, Colpetty, Colombo.

---

# முருகா

'முருகா' என்ற எழுத்துக்கள் பொறித்த எனுமல் போர்டுகள் 9" X 3" அளவில் தயாராகியுள்ளன. ஒவ்வொருவர் வீட்டு வாயில் முகப்பிலும் அழகு செய்யுமாறு முருகன் அடியார்கள் விரும்பியவண்ணம் செய்யப்பட்டது. விலை: போர்டு 1-க்கு ரூ 0—12—0; தபாற்செலவு 0-6-0. வேண்டுவோர் (தபால் செலவுடன்) 1—2—0 மணியார்டர் அனுப்பவும். 6 போர்டுகளுக்கு தபால்செலவு 1-0-0. சிலோன் அன்பர்கட்கு மட்டும் V. P. மூலம் அனுப்பப்படும். வேண்டுவோர் எழுதவும்.

## திருப்புகழமிர்தம் ஆண்டு மலர்கள்

ஒவ்வொரு ஆண்டும் வெளிவந்த பன்னிரு புத்தகங்களையும் ஒன்ருகச் சேர்த்தது.

| | | | | விலை. | தபாற்செலவு. |
|---|---|---|---|---|---|
| 1 | விய | [பதினோராவது] | ,, | 2-12-0 | 0-8-0 |
| 2 | சர்வசித்து | [பன்னிரண்டாவது] | ,, | 3- 0-0 | 0-8-0 |
| 3 | சர்வதாரி | [பதின்மூன்ருவது] | ,, | 3- 0-0 | 0-8-0 |
| 4 | விரோதி | [பதினன்காவது] | ,, | 3- 0-0 | 0-8-0 |

மற்ற ஆண்டுப் புத்தகங்கள் கிடைக்காது.

திருப்புகழமிர்தம் காரியாலயம்,
144 சாமிநாயக்கன் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2

Printed & Published by M. Madhusoodana Sivam at the Thiruppugal Amirtham Press, 144 Swaminaicken Street, Chindaripeta, Madras. Editor: Sri Kirupanandavari.

